*Taṉavaiciya ūḻiyaṉ*

*Malar 4, itaḻ 8*

*November 09, 1923*

Record no. 148

உ

சிவமயம்.

சென்னைப் பதிவுஎண் கருOகூ                                        தந்தி விலாசம்:—"Oolian"

# தனவைசிய ஊழியன்

தனவைசிய ஊழியர் சங்கத்தினின்றும்
வெள்ளி தோறும் வெளி வருவது.

ஆசிரியன் :—ராய. சொக்கலிங்கம்.

குடிசெய்வ லென்னு மொருவற்குத் தெய்வம்
மடிதற்றுத் தான்முந் துறும்—திருக்குறள்.

உழையும் உப்பக்கங் காண்பர் உலைவின்றித்
தாழா துஞற்று பவர்—திருக்குறள்.

மலர் ச. காரைக்குடி ருத்ரோத்காரி-ஹு ஐப்பசிமீ உச-உ (கூ—கக—ககூஉங) இதழ் அ

## நாம் சுகமாய் வாழ்வதெப்படி?

நாம் உண்ணும் உணவினாலும் அருந்தும் நீரினாலும்சுவாசிக்கும் காற்றினாலும் நமது சரீரத்தில் விஷம் உண்டாகிக்கொண்டிருக்கிறது என்பது யாவரும் அறிந்ததே. அவ்விஷம்சுவாசத்தினாலும்வியர்வையினாலும் மலஜலம் கழிவதினாலும் வெளியாகிக்கொண்டிருக்கிறது. அவ்விஷமாகிய அசுத்தத்தை நமது தேகத்திலுள்ள சிலகருவிகள்வெளியாக்கிக் கொண்டிருக்கின்றன. அக் கருவிகள் வேலைசெய்யத் தடைப்படுமானால், இவ் விஷம் வெளியேறாமல் தேகத்திலேயே சுவறிப் பிணிகளை யுண்டாக்குகின்றது. ஆகையால் வியர்வை மலம் ஜலம் இவற்றைக் கழிக்கவேண்டிய முறையில் நாம் அவசியம் கவனம் செலுத்தல் வேண்டும். அதாவது மலபந்தம் இல்லாமற் பார்த்து வரவேண்டும். வியர்வை சரியாயிருத்தல் வேண்டும். இவற்றுக்கு முக்கியமானவழி யென்னவெனில், நாம் எப்போதும் சுத்தக் காற்றை உட்கொள்வதிலேயே ஜாக்ரதையைச் செலுத்த வேண்டும். அந்தக் காற்றை யுட்கொள்ளும் கருவியாகிய இருதயம் நன்றாய் வேலை செய்தல் வேண்டும். தினம் நெடுமூச்சு அப்பியாஸம் செய்தல் இதற்குத்தக்க முறையாகும். அதாவது பிராணாயாமஞ் செய்தலேயாம்.

ஜலம் கழிக்குங் கருவியாகிய மூத்திரகோசத்தைச் சரியாய் வேலை செய்யும்படி செய்யவும் வேண்டும். சுத்த நீரையே பருகல் வேண்டும். எந்த நீரையும் ஒரு முறை கொதிக்கவைத்துப் பின் ஆற்றிக்குடிப்பது நலமாகும்; ஜலம் விரைவிற் கெட்டுப்போகும்;

## சுகாதாரக் குறிப்புகள்.

ஆகையால் மேற்சொன்ன முறையை அவசியமான முறையாய் அநுசரிப்பது மிகவும் நல்லதேயாகும். ஆற்று நீர் எப்போதும் நல்லது. தேக்க நீர் எப்போதும் தீயது. தேக்கநீர்ப் பானத்தின்போது மிகுந்த ஜாக்கிரதை கொண்டு, அதனை வடிகட்டித்தெளியவைத்துக் கொதிக்கச்செய்தே அவசியம் குடித்தல் வேண்டும். கிணறு முதலிய ஊற்று நீர் தேகத்துக்கு ஆரோக்யம் செய்வதுதான். ஆனால் அக் கிணற்றங் கரைகளில் அசுத்தம் சேராவண்ணம் மிகுந்த ஜாக்கிரதை யெடுத்துக்கொள்ள வேண்டும். நம்மவர்க்குஜாக்ரதையென்பதும் சுத்தமென்பதும் இன்னதென்றே தெரிவதில்லை. அதிலும் பெண் மணிகட்கு அடிக்கடி தவளைகள்மாதிரி மூழ்கி மூழ்கி யெழுந்திருக்கத் தெரியுமே யொழிய, தாம் ஸ்நானம் செய்வது எதற்காக வென்பதை யவர்கள் முற்றிலும் அறியாதவர்களாகவே இருக்கிறார்கள். இப்படியே எவ் வகையிலும் அவர்கள் இருக்கிறார்கள். ஆகையால் அறிவுள்ள ஆண்மக்களாவது அவர்கட்குத் தெரியும்படியாக வற்புறுத்திச் சொல்லியேனும் குளிப்பது குடிப்பது ஆகிய வகைகளில் சுத்தம் நிலவும்படியாகச் செய்தல் வேண்டும். சுத்தமாகத் தேய்த்து மூழ்குவதனால், வியர்வையைக் கழிக்கும் கருவிகள் சுத்தமாகித் தம் வேலையை நன்றாய்ச் செய்கின்றன. நல்ல நீரை—கொதித்தாறிய நீரை—வடிகட்டிய நீரை—தெளிந்த நீரை யுட்கொள்ளுவதினால்,

ஜலத்தைக் கழிக்கும் கருவியாகிய மூத்திர கோசம் சுத்தமாகி நன்றாய் வேலைசெய்கிறது.

ஆரோக்ய வாழ்வுக்கு ஆகார சுத்தமும் அவசியம் வேண்டிய தென்பதுசொல்லித் தெரியவேண்டிய தொன்றல்ல, யாவருமியல்பாகவே அறிந்து கொள்ளக்கூடிதாயினும், நம்மவர்க்குக் கவனம் மாத்திரம் செல்லுவதில்லை யென்பது நன்கு தெரிகிறது. நாம் உட்கொள்ளும் உணவைக்காலத்துக்குத் தக்கபடி ஒழுங்கு படுத்திக் கொள்ளல் வேண்டும். காலமல்லாக் காலத்திற் சாப்பிடுவதும் பசியில்லாத போது சாப்பிடுவதும் அளவுக்கு மிஞ்சியுண்ணுதலும் அளவுக்குக் குறைவாயுண்ணுதலும் காலத்துக்கு மாறான பதார்த்தங்களை யுண்ணுதலும் எப்போதும் கெடுதலானது. நமது சரீரத்துக்கு விஷம் ஊட்டக் கூடிய உணவையேனும் பானத்தையேனும் உட்கொள்ளுதல் கூடாது. புகையிலை அபின் இவைகளை அறவே யொழித்து விடல் வேண்டும். இவைகள் மருந்து வகையிற் படைக்கப்பட்ட விஷப்பண்டங்களாகையால், மருந்தாக உட்கொள்ளும் போதும், வேறொரு மருந்திலும் தீராதநோய்கட்கும், தக்கவைத்தியரின் அநுமதியின்றித் தொடவே கூடாது.

அன்றியும், எல்லா அவயவங்கட்கும் தசை நாம்புகட்கும் போதுமான உழைப்பு இருத்தல் வேண்டும். அவற்றை யொழுங்கு படுத்தக்கூடிய தேகாப்பியாஸங்கள் இருத்தல் ஆண் பெண் இருபாலார்க்கும் அவசியமேயாகும். இதனை யடுத்துவரும் தேகாப்பியாஸம் என்னும் வியாஸத்தை அவசியம் [illegible] படிக்கும்படியாக [illegible] வேண்டுகிறோம்.

சுகவாழ்வுக்கு மனக்களிப்பும் அவசியம் வேண்டியதுதான். எப்போதும் சந்தோஷகரமான மனதுடனும் நன்மையானவற்றில் நம்பிக்கையுடனும்எதைச் செய்தாலும் சித்தி பெறலாமென்னும் சர்வாநுகூலமான மனதுடனும் இருத்தல்வேண்டும். ஓர் நோயைப்பற்றிப் பயப்படுதலே அந்த வியாதி நமக்கு வருதற்கு ஓர் முக்கிய காரணமாகும். எந்த வியாதியைக் குறித்தும் கொஞ்சமேனும் மனதிற் பயங்கொள்ளாமல் தைரியமாக இருந்து வரல் வேண்டும். கொள்ளை நோய்களான தொற்று வியாதிகளைப்பற்றிக்கூடமனதிற்பயத்தைத் தரக்கூடிய எண்ணங்களை யுண்டுபண்ணிக் கொள்ளுதல் கூடாது. ஆனால் அவ்வியாதி ஊரில் பரவுமானல் யாதொரு பயமும் மனக்கலக்கமுமில்லாமல் அவற்றைப் பரவாமல் தடுக்கக் கூடிய முறைகளையும் அவை தம்மீது தொற்றாமலிருக்கும் உபாயங்களையும் ஜாக்கிரதைகளையும் கையாடல் வேண்டும்.

"நோயற்ற வாழ்வே
குறைவற்ற செல்வம்"

என்பதை எப்போதும் மறத்தல் கூடாது.

## கொப்பனாபட்டி.

முறைகடந்த கலியாணம்.

இவ்வூரில் காளிது ருத்ரோத்காரிளு ஐப்பசிமீ ௧௨௨ மு. ப. மு. பழனியப்ப செட்டியார் என்பவர் அவர் குமாரர்முத்தராமன்செட்டியாருக்கு இரண்டாவது தாரமாக அழ. நா. நாகப்பசெட்டியார் மகள் அலமேலு என்னும் பெண்ணை மணம் செய்துவைக்க மாப்பிள்ளையே மாங்கல்ய தாரணஞ் செய்து கலியாணம் முடித்தது. ௧௩௨ அன்று நகரத்தார் கூடி பத்தூர் நகரத்தாருக்கு ஓலை யெழுதி இருக்கிறார்கள். சாத்திரங்களிற்சொல்லியபடி மாப்பிள்ளை மாங்கல்ய தாரணஞ் செய்வதே முறையாக விருப்பினும், நமது முன்னோர்கள் அனுட்டித்துவந்த முறையைக் கைக்கொள்வதே நியாயமாகும். அங்ஙனமிருக்க இந் நகரங்களில் இம்மாதிரி முறைகடந்த கலியாணங்கள் நடந்தால், அந்தந்த ஊர்களில் நகரக்கூட்டங்களுஞ் சிதைந்து அதனால் பெரிய கஷ்டங்களும் நேர்ந்துவிடும். அன்றியும் முன்னோர்கள் வழக்கத்தைக் கைவிட்டு மாப்பிள்ளையே மாங்கல்யதாரணஞ்செய்வது என்று ஏற்பட்டுவிடுமானல் ஒவ்வொருவருடைய இஷ்டப்படி கலியாணங்கள் நடக்கலாம். அதனல் நம் சாதியின் பெருமையும் கட்டுப்பாடும் அழிந்து போய்விடுமன்றோ? மேற்கண்ட ஸ்ரீமான் நாகப்ப செட்டியார் சில ஆண்டுகட்கு முன் தவறிவிட்டனர். அதனல் பங்காளிகள் நாகப்பசெட்டியாருக்குச் சுவீகாரம் எடுத்துப் பெண்ணை மாற்றிக் கலியாணம் செய்யவேணுமென்று சொல்லியும் கேளாது, பங்காளிகள் கலியாணத்திற்குக் கூடமுடியாதெனக் கூறியும் அதையும்மறுத்துமேலேகுறித்தநாகப்ப செட்டியார் பெண்சாதி மூத்தழகி ஆச்சி யென்பவர்கள் கலியாணத்தை ஊர் ஆலாத்தி இல்லாது முடித்துவிட்டார்கள். இதன் முடிவான விஷயம் பத்தூர் நகரத்தார் கூடியபின் கூட்டத்தின் முடிவுதெரிந்து எழுதுவோம். நிருபர்.

## தேகப்பயிற்சி.

நிறைந்த செல்வமடைந்து உயர்ந்த பதவியிலிருக்கவும், நோயற்றுத்திட சரீரத்துடன் வெகுகாலம் ஜீவிக்கவும், விரும்புவது சர்வஜனங்களுக்கு மியற்கையே. தனம் சம்பாதிக்கும் விஷயத்தில், பலர் பலவிதமான முயற்சிசெய்து தங்கள் சிரமத்திற்கும் அதிர்ஷ்டத்துக்கு முரிய திரவ்யாதி பாக்கியம் பெறுவதை நாம் பார்த்துவருகிறோம். பொருளிருந்தாலே சுகமுண்டாகுமென்பதில்லை. தனதான்ய முதலிய பாக்கிய முள்ளவர்களும் வியாதியால் பீடிக்கப்பட்டு மனோதுக்கத்தை யனுபவிப்பதுண்டு. "நோயற்றவாழ்வேகுறைவற்ற செல்வம்" என்கிறபடி எளிய நிலையி லிருந்தாலும் ரோகபீடையில்லாமல் திடகாத்ரனாய் தான் சுகமாயிருப்பதுடன் பிறருக்கும் உபகாரஞ் செய்யக்கூடிய ஸ்திதியி லிருப்பதே பெரும் பாக்கியம். தேகத்தில் வியாதி குடிகொண்டு இளமைப் பருவத்திலேயே கை, கால், கண் முதலிய அவயவங்கள் பலமிழந்து, தனக்குமனோத்ஸாகமின்றி உறவினர்களுக்கும் அசௌகர்யமும்கிலேசமு முண்டாம்படி வாழ்வதை விட இறப்பதே மேன்மை. பிறர் நன்கு மதிக்கும்படி செல்வமும் அதிகாரமும் பெற்று, மேன்மேல் தங்கள் ஆசையைப் பூர்த்திசெய்து கொள்ளக்கூடிய ஸ்திதியி லிருப்பவர்களும் கொடிய நோயால் வருந்தும்போது, இவ் வுலகில் எல்லாவற்றைக்காட்டிலும் அத்யந்தம் பிரியமான தங்கள் உயிரையே மாய்த்துவிடத் துணிகிறார்கள் எனப்பலசமயம் கேள்வியடைகிறோம். பாபமற்ற ஸர்வ சுகானுபவங்களுக்கும் முக்கிய காரணமான தேகபலத்தைத் தேடிக்கொள்வது எல்லாருக்கும் முதல் நோக்கமா யிருக்கவேண்டியதாயினும், அது விஷயமான அறிவை ஸம்பாதிக்க முயலாமல் "ரோகம் வருவது தெய்வாதீனம்; மனுஷ்யனல் தடுக்கக்கூடியதல்ல. அப்படி வந்தால் வைத்தியர் மூலமாய் சிகிச்சைசெய்து கொள்ளலா" மென்று நினைத்து உதாஸீனமா யிருப்பது உலகவிந்தையிலும் விந்தை. பூதபௌதீக சாஸ்திரத்தில் இடைவிடாமல் ஆராய்ச்சிசெய்து ஜனங்கட்கு ஹிதகரமான வித்தைகளை ஸர்வ உபகாரமாய்ப்பரவும்படிசெய்வதில் மிகுந்த ஆஸக்தியுள்ள நமது முன்னைய பெரியோர்களிடத்திலேயே இவ்வித நிலைமை இருந்ததாகத்தெரிகிறது. இப்பொழுது கேட்பானேன். கஷ்டப்பட்டுச் சம்பாதித்தால்தான் கல்வியின் அருமை அறிவார்கள் என்ற எண்ணத்தினாலும் சாதனக் குறைவுகளினாலும் இதர காரணங்களினாலும், வித்யாப்ரசாரம் நமது தேசத்தில் சுலபமாய் ஏற்படுகிறதில்லை. அதிலும் சரீர சாஸ்திரக் ஞான சம்பாதன மூலமாய்த் தேகபலத்தைத் தேடிக்கொள்ளும் பிரயத்தனம் தற்காலம் மிகவும் சுவல்பமா யிருக்கிறது. வியாதி பீடையில்லாமல் தேக சௌக்கியத்துடன் வாழவேண்டுமென்கிற ஆஸ்தையிருக்கலாம். பிரயத்தனமில்லாவிட்டால் விரும்புவதினாலேயே எண்ணம் பலிக்குமா? இரை வேண்டுமென்று இச்சித்து சிங்கம் குகையில் படுத்துறங்கினல், மிருகங்கள் தாங்களே அதன் வாயில் வந்து விழுமா? சதா ரோகியாயிருப்பவனை நோக்கி "என் ஐயா, எப்பொழுதும் வியாதியஸ்தராய்த் தேக சுகமில்லாமல் அடிக்கடி வைத்தியர் வீட்டுக்கும் போய்க் கொண்டிருக்கிறீரே; காலத்தில் ஸ்நானம் செய்து அழுக்கற்ற வஸ்திரங்களை யணிந்து நல்ல உணவும் சுத்த ஜலமும் உட்கொண்டு, மிகவும் அவசியமான தேகப்பயிற்சியில் முயன்று வீட்டையும் அதன் சுற்றுப் பக்கங்களையும் குப்பை செத்தையில்லாமல் வைத்துக்கொண்டு சுக வசதிகளைக் கவனித்து நோவு அடிக்கடி வரவொட்டாமல் தடுத்துக்கொள்ளக்கூடாதா? வீணாய்த் திரவியச் செலவையும் சுகக் குறைவையும்தேடிக்கொள்வானேன்?" என்றுகேட்டால், அதற்குஅவர், வியாதி வருவதும் போவதும் நம்மைக்கேட்டா ஏற்படுகிறது? ரோகத்தால் அவஸ்தைப்படத்தலைவிதியிருந்தால் விடுமா? அதிருக்கட்டும்; விசாலமானவீடும்சுத்த வஸ்திரங்களும் நல்ல உணவும் தேடிக்கொள்வதோடு தேகப் பயிற்சியும் செய்து கொண்டுவா, நாம் என்னபிரபுவா? காற்றோட்டமுள்ள பங்களா யிருக்கிறதா? அப்படித்தானிருந்தது; எல்லாச் சௌகர்யங்களையு முடைய பெரிய மனிதர்களுக்கு வியாதி வருவதில்லையா? ரோக மில்லாதவன் ஜகத்திலுண்டா? இதெல்லாம் சுத்தப்பிரமை; காலவித்யாசம்; ஏதோ இரண்டெழுத்துப்பேர் வாசிக்கத்தெரிந்துவிட்டால் நிரம்பக் கற்றவர்களைப்போல் வெகு நாளாய் நடைபெற்றுவரும் ஆசார ஒழுக்கங்களை யெல்லாம் தூஷித்துப் புதிதாய்ப் பேசுகிறார்கள்" என்றும் இம்மாதிரியாகவும் சொல்வது ஆபூர்வமில்லை.

(தொடரும்.)

ராம. வே. பழ. சோமசுந்தரம்.
மைடான் டில்லி.



## இந்தியச் செய்தி.

மகாத்மா காந்தி சிறைசென்று இன்றோடு ௬௨ நாட்களாகின்றன. வருஷம்-௧ நாட்கள் ௨௩௯.

* * *

டாடாஎண்ணெய்உறபத்திச்சாலையில் இவ்வாண்டு ௬-லட்சம் ரூபாய் நஷ்ட மேற்பட்டிருக்கிறது.

* * *

சட்டமறுப்புக் கூட்டத்துக்காக அமிர்த ஸரஸில் ஒரு காரியாலயம் ஏற்பட்டிருக்கிறது.

* * *

பர்மா தக்ஷிண ஷான் நாட்டில் ஒரு பெரிய வெள்ளிச் சுரங்கமும் ஈயச் சுரங்கமும் அகப்பட்டிருக்கின்றன.

* * *

பண்டித நாராயண வாஜபேயர் சிறையில் மிகவும் இளைத்து வெளுத்து இருக்கிறார். என்ன காரணமோ?

* * *

திருவிதாங்கூர்ச் சட்ட சபையில், "பசுவதை கூடா"தென்று கொண்டுபோன தீர்மானம் தோற்றுப்போய்விட்டது.

* * *

இந்திய அரசாங்கத்தின் அந்நிய நாட்டுக் காரியாலயத்திலிருந்த நாபா சமஸ்தானத்தின் தஸ்தாவேஜிகள் காணப்படவில்லை.

* * *

ஆங்கில ஏகாதிபத்தியப் பொருட்காட்சிக்கு அனுப்புவதற்காகப் பஞ்சாபில் சிறந்த சாமான்கள் செய்யப்பட்டிருக்கின்றன.

* * *

ராசிபுரி அல்லவாய்ப் பட்டியில் கள்ளுக்கடைக் குத்தகைக்காரரொருவரை அவ்வூர் ஜனங்கள் பகிஷ்காரம் செய்திருக்கிறார்கள்.

* * *

முதன்முறையாக அந்தமான் தீவில் குடியேறுவதற்காக ௧௫ ஆங்கில இந்தியர்களை நவம்பர் ௨௰ உ அனுப்பப் போகின்றார்கள்.

* * *

இலங்கையின் தென் மாகாணத்தைச் சேர்ந்த வருப்பிட்டியா கோஸ்க் கொடை என்னும் பகுதிகளில் இரும்பு ஏராளமாக வெட்டியெடுக்கலாம்.

காந்தி ஸங்கம் என்னும் பெயருடையதொரு சங்கம் பாட்னாவில் ஏற்பட்டிருக்கிறது. மகாத்மாவின் கொள்கைகளைப் பரவச்செய்தலே இதன் நோக்கம்.

* * *

ரஸாயன தந்திரம் என்னும் நூலில், பல்லாண்டு வாழ்வதற்குரிய வழிகள் சொல்லப் பட்டிருக்கின்றனவென்றுகவிராஜ ஞான நாதசேன் கூறினர்.

* * *

கல்கத்தா மாகாணத்துக்குக் கல்கத்தாவில் ஏற்பட்டிருப்பதைப் போலப் பம்பாய் மாகாணத்துக்குப் பம்பாயிலும் பத்திரிகாசிரியர் ஸங்கமொன்று ஏற்பட்டிருக்கிறது.

* * *

ஸ்ரீமான் சாஸ்திரியார், "கெனியா போனல் எல்லாம்போயிற்" றென்று, ஏகாதிபத்திய மகாநாட்டிற்குச் சென்றிருக்கும் ஸ்ரீமான் ஸப்ரூவுக்குத் தந்தி கொடுத்திருக்கிறார்.

* * *

அரசாங்கத்துக்குச் சொந்தமான இருப்புப்பாதைகளிலிருந்து அக்டோபர் மாதம் ௨௰-தேதியுடன் முடிவடைந்த வாரத்தில் ௧௬௫-கோடி ரூபாய் வருமானம் கிடைத்திருக்கிறது.

* * *

மேகத்தைக் கவரும் மரங்கள் நீலகிரியிலிருப்பதால், அம்மரங்களின் கீழிருந்து மேகமாலை ராகம் பாடி மழை பெய்யச் செய்யலாமென்று ஸங்கீத பண்டிதையான ஸத்யபால தேவி கூறுகிறார்.

* * *

பவநகர் ஸம்ஸ்தானத்து இருப்புப்பாதையிற்பாம்புகடித்துஇறந்து போன ஒரு ஸ்திரீயின் மகன் அவள் இறந்துபோகும் தறுவாயிற் சொன்னபடியே தோண்டிப் பார்த்து ௫௦௦௦-ரூபாய்ப் புதையலைப் பெற்றான்.

* * *

"ஏர்வாடாவி லிருக்கும் எனது தலைவர்க்கு, நான் என்னென்ன தேச ஊழியங்கள் புரிந்திருக்கிறேனென்று கணக்குக் காட்டவேண்டும். அவர் அருளிச்செய்த கட்டளைகளை நிறைவேற்றுவதே எனது கடமை," என்று மௌலானா ஷவுகத்அலி கூறினர்.

* * *

தபாற் சேவகர் முதலியவர்க்குள்ள உரிமைகூடக் கத்தியவார் சமஸ்தானாதிபதிகட்கு இல்லாமற் போயிற்றே என்று இந்துப் பத்திரிகை கூறுகிறது. தபாற் சேவகர்களும் சங்கங் கூட்டுகிறார்கள். அந்த ஸமஸ்தானாதிபதிகள் ஸங்கம் கூட்டப்படாதாம்.

* * *

டெக்கா நாணயக் காட்சிச் சாலையார், டில்லியில் ஓர் ஏழை முஸ்லிமிடமிருந்து, அக்பர் காலத்திலும் ஜிஹாங்கீர் காலத்திலும் வழங்கப்பெற்ற இரண்டு நாணயங்களை வாங்கியிருக்கிறார்கள். அக்பர் நாணயம் ஆமதாபாத்தில் அச்சிடப்பட்டிருக்கிறது.

* * *

அருப்புக்கோட்டை தாலுகா திருக்குமரிபுரத்தில் சாதியடிக்கு ஒன்றரையடியுள்ள குறுகிய வாயும் நூறு கஜும் ஆழமும் பால் போன்ற நீருமுள்ளதொரு ஊற்று திடீரென்று தோன்றியிருக்கிறது. ஆயிரக்கணக்கானஜனங்கள் போய்ப் பார்த்துப் போகிறார்கள்.

* * *

நெய்பதற்காக உதவும் இயந்திர நூல் அன்னிய நாடுகளிலிருந்து வந்து கொண்டிருப்பது யாவரும் அறிந்தது. தற்போது, இந்தியாவிலிருந்தே இயந்திர நூலாக ஆமதாபாத்தில் காலிகோ இயந்திரச் சாலைக்காரர்கள் அநேகம் செய்து விற்று வருகிறார்கள்.

* * *

ஆங்கிலச் சாமான்களைப் பகிஷ்கரிப்பதென்றதீர்மானத்தை அலகாபாத் நகர பரிபாலன சபையார் செய்துவிட்டதால், இதர நகர பரிபாலன ஸபையாரும் அதனைப் பின்பற்றி நடப்பார்கள். எனில், ஆங்கிலத் தொழில்கள் நடுக்கற்றையடையுமென்பதிற் சந்தேகமில்லை.

* * *

நிகழும் ஐப்பசி ௨௪௨ திங்கட்கிழமை தேவகோட்டை எட்வர்ட் ஹாலில், ராமநாதபுரம் ஜில்லா வரிவசூல் தலைவர் (கலெக்டர்) ஸ்ரீமான் வி. டி. கிருஷ்ணமாசாரியார் (பி. ஏ. பி. எல்.) அவர்களால், பள்ளத்தூர் ஸ்ரீமான் அ. மு. முருகப்பசெட்டியார் அவர்கட்கு ராவ் பகதூர் என்னும் பட்டமும், இளையான்குடி சந்தி அப்துல் ரவூத் தர் ஷண்முகம் [illegible] கான்பகதூர் என்னும் பட்டமும் அளிக்கப்பெறும் விழா நடந்தேறும். [illegible]

நாளென்செயும்! வினைதானென்
செயும்!எனை நாடிவந்த
கோளென்செயும்! கொடுங்கூற்
றென்செயும்! குமரேசரிரு
தாளுஞ் சிலம்புஞ் சதங்கையுந்
தண்டையும் ஷண்முகமும்
தோளுங் கடம்பும் எனக்குமுன்னே
வந்து தோன்றிடினே.

—கந்தரலங்காரம்.

தனவைசிய ஊழியன்.
காரைக்குடி. ஐப்பசிமீ ௨௪-௨

## கிராம பரிபாலனம்.

பரிபாலனமென்பது ஜனரக்ஷணம் என்னும் பொருள் தந்து நிற்கின்றது. பொது ஜனங்கள் வலியற்றவர்களும் ஏழைகளும் வலியுற்றவராயினும் வெவ்வேறு தொழில்களுடையவர்களுமாகப் பலராகிப் பல்கி யிருக்கின்றனர். இவர்கள் தத்தமது சொந்தக்காரியங்களாகிய தேக குடும்ப ஆத்ம விஷயங்கட்காகத் தமது காலங்களைச் செலவிட நேருமென்பதைப் பற்றித்தான், எங்கும் எந்த அரசாங்கமும் பொதுக்காரியங்களை-பொதுஜன சவுகரியங்களை ஏற்றுக்கொண்டு ஆற்றிவருகின்றன. பொதுஜன சவுகரியங்களை யாற்றி வருவதற்காகவே ராஜ்யங்கள் ஸ்தாபிக்கப்பெற்று அரசர்களும் தேர்ந்தெடுக்கப்பெற்றார்கள் என்பதும் தவறாகாது. இவ் வரசாங்கத்துக்கு அதன் பொருட்டே, பொதுஜனங்கள் தனம் உதவுவதாகிய வழக்கமும் இருந்துகொண்டிருக்கிறது. இத்தகைய அரசாங்கத்தின் சிறிய பாகமே கிராம பரிபாலனம் என்று சொல்லப்படுவதாகும். அப் பெரிய அரசாங்கம் எப்படி நடைபெறுமோ அதுபோலவே இச்சிறிய அரசாங்கமாகிய கிராம பரிபாலனமும் ஒழுங்குபெற நடைபெறல் வேண்டும். ஒவ்வொரு கிராமமும் பரிபாலனத்தில்ஒழுங்குபெற நடக்கும்போது அப் பெரிய அரசாங்கம் ஒழுங்காகச் செல்லுதலும், இவை ஒழுங்கு தவறும்போது அவ் வரசாங்கம் ஆட்டமுறுதலும் சரித்திரங்கண்ட உண்மை. ஆதலால், கிராம பரிபாலனம் சீர்கெடுவதே பெரிய அரசாங்கத்தைக் கெடுப்பதாகும் என்னும் அபிப்பிராயங் கொள்ளலும் மிகையாகாது.

கிராம பரிபாலனமானது, கிராமத்துப் பிரஜைகளின் சுகாதாரம் கல்வி தொழில் முதலிய முன்னேற்றங்களில் அக்கரை மிகுதியுங் கொண்டு உழைக்கும் நோக்கமுடையதா யிருத்தல் வேண்டும். கிராமத்திற் களவு, சூது முதலிய துஷ்ட நடத்தைகள் நடைபெற்றுக் கிராம வாசிகட்குக் கஷ்டமும் நஷ்டமும் நேரிடா வண்ணமும், ஊர்க் குப்பைகள் சாக்கடைகள் அசுத்த பதார்த்தங்கள் நீர்த் தேக்கங்கள் நீர் நிலைகள் முதலியவற்றா லுண்டாகும் அசுத்தக்காற்று அசுத்தநீர் அசுத்தப் பொருள்கள் இவைகளாற் பொது ஜனங்கட்கு வியாதியும் அகால மரணமும் நேரிடா வண்ணமும் பாதுகாத்து வருதல் கிராம பரிபாலனத்துக்கு முக்கிய அங்கங்களாகும். இவை தடுமாறின் கிராம சுகம் தவறிக் கலகமும் கலக்கமும் நேர்ந்து, பெரிய அரசாங்கத்தையும் அலைக்கக்கூடிய வழி ஏற்பட்டு விடலாம்.

பெரிய அரசாங்கத்துக்கு ஏற்பட்டிருப்பது போல, இச்சிறிய அரசாங்கத்துக்கும் பண்டிதர்களும் பொதுநோக்குடையவர்களும் ஜனநன்மையைநாடுபவர்களும் பரோபகாரிகளும் அங்கத்தினர்களாக அமைந்தே இப் பரிபாலனத்தைச் செம்மைபெற நடத்தல் வேண்டுமென்பது சட்ட முறையான—பாம்பரையான ஒழுக்கமாக இருக்கின்றது. இந்த அங்கத்தினர்கள் தங்களது சுயநன்மையைக் கருதாமல் பொது நன்மையையே முக்கிய நோக்கமாகக் கொண்டு உழைத்தல் உதவல் வேண்டுமென்பது யாரும் ஒப்ப முடிந்ததாம். இவர்கள், தத்தமது அறிவுக் கெட்டிய—திருஷ்டிக்குத் தோன்றிய நன்மைகளைக் கண்டு பரிபாலன சபையில்சென்று வற்புறுத்திப் பேசி, பொதுஜன நன்மையைத்தேடுதலும், இதல்லாமலும், தாம் கண்ட—கேட்ட தீமைகளை நேரில் அறிந்து அவை நீங்கும் வண்ணம் முயற்சித்து வாதாடியேனும் பொதுஜன சவுகரியத்தைத் தேடுதலும், தங்களது கடமைகளாகக் கொள்ளல் வேண்டும். இவர்கள் அத்தகைய நன்மைகளைச் செய்யாமலிருந்தாலும் தீமைகளைச் செய்ய உடந்தையாயிருந்தாலும் கடமையை மறந்தவ ராதலோடு நில்லாமல், பொதுஜன அபகாரிகளாகவும் அரசாங்க வெறுப்புக்கும் வீழ்ச்சிக்கும் காரணர்களாகவும் ஆகின்றார்கள் என்பது வெளிப்படை. ஆகையால், கிராமபரிபாலனத்தலைவரும் அதன் அங்கத்தினரும் தங்கள் கடமைகளைச் சரிவர ஆற்றல் வேண்டுமென்பதை வற்புறுத்துகின்றோம்.

தற்போது எந்தக் காரணத்தினாலோ, சிற்சில கிராமபரிபாலனங்களில் அங்கத்தினர்களும் தலைவரும் பொதுஜன நன்மைகளைக் கருதாதவர்களாகவும் பொதுஜன பொறுப்பற்றவர்களாகவும் நியமிக்கப் பெற்று இருக்கிறார்கள். அதனாற் பல கிராமங்களில் பொதுஜன நன்மை கெட்டுப் பொதுஜனக் கலக்கமும் கலகமும் ஏற்பட்டு அக்கிராம பரிபாலனமும் ஆட்டத்தையடைந்திருக்கக்காண்கிறோம். நமது முன்னைப் பெரியோர்களும் தற்போதைய பொறுப்பாளிகளும் கிராம பரிபாலனமே ஒரு பெரிய ராஜாங்கத்துக்கு முதுகந் தண்டென்று வற்புறுத்தியிருக்கின்றார்கள். ஆகையால், கிராமப் பொதுஜனங்கட்குக் கேடு சூழுமவர்கள் அரசாங்கத்தார் பிரஜைகளாகிய இரு வகுப்பினராலும் வெறுக்கப் படுபவர்களாகின்றார்கள். நிற்க,



கிராமவாசிகளில், பரிபாலன அங்கம் பெற யோக்யதையற்ற சிலர் அதனைப் பெற்றுக் கொண்டு பொது ஜனவாழ்வைச் சிறிதேனும்கருதாது, தமதுவருவாயொன்றையே மதித்தோ, தமது அற்பப் புலனுகர்ச்சியை மதித்தோ ஜனங்கட்கு அசௌகரியமான பல புரிந்து விடுகின்றனர். இத்தகையோர் பொதுஜனத் துரோகிகளாகவும் அரசாங்க விரோதிகளாகவும் ஆய்விடுகிறார்கள். இப்படி அறிவுடையோர் செய்யாரென்பதுறுதி. இத்தகைய சீர்கேடுகள் அறிவில்லாதவர்களால் நேருவது இயற்கை. இவற்றைக் கிராமபரிபாலனத்தலைவர்களும்அவர்களது சகாக்களும் ஆய்ந்து அறிந்து பொதுஜனநன்மையையே முக்கிய நோக்கமாகக் கொண்டு, எவ்வித தாக்ஷிண்யத்தையும் பாராது, தங்கள் கடமைகளைநன்று ஆற்றக் கடவார்களாக.

## இடிமுழக்கம்.

### கசர்ப்புக்கடை.

உள்ளூரில் ஸ்தல ஸ்தாபனம் ௩-வது பிரிவில் ஸ்ரீமான் ஆவி. லெ. சொ. வீட்டின் ஒரு புறத்தில் புதிதானதொருகசர்ப்புக்கடை ஏற்பட்டிருக்கின்றதெனத் தெரிந்து மிகவும் வருந்துகிறோம். இந்தக் கடையை அங்கு வைப்பதற்கு ஸ்தல ஸ்தாபனத்தாரும் அநுமதியளித்திருப்பது அநீதியாகும். இது பொது ஜன நன்மைக்குப் பொருந்தாததாகவும் சுகாதாரத்துக்குக் கேடு செய்வதாகவும் அரசாங்கச் சட்டத்தைத் தவறுபட உணர்ந்ததாகவும் ஏற்படுகின்றது. ஊர்வாசிகட்குத் தீமை தரும் எச்செயலும் அரசாங்கத்தால் ஆமோதிக்கப்படாதென்பது அறிவாளிகள் உணர்ந்தது. நிற்க, ஜீவ காருண்யமும் புலான் மறுத்தலும் ஓங்கி வளர்ந்து ஜீவர்கள் தேகசுத்தமும் மனோ சுத்தமும் பெற்று ஆன்ம விருத்தியை நாட வேண்டுமென்னும் பேரியக்கம் நடைபெற்றுவரு மிந்நாளில் இத்தகைய காரியம் செய்யப்புகுவது அறிவுடைமையாகாது. ஆகையால், இதற்குக் காரணமானவர்கள் இக் கடையை வெகுவிரைவில் எடுத்துவிடச் செய்வார்களென்றும் ஸ்தல ஸ்தாபனத்தார் தமது கடமையாகிய பொது ஜன நன்மையைக் கருதி இத்தகைய அசுத்தக் கடைகளை ஊருக்குள் இராமற் செய்துவிட இன்றே முயல்வார்களென்றும் நம்புகிறோம்.

### ஒரு புதிய இயந்திரம்.

வாய்ப் பேச்சின் ஒலியினால் அந்த ஒலிக்கேற்ற அக்ஷரங்களை யச்சடிக்கும் இயந்திரமொன்றை ஸ்ரீமான் மார்ட்டின் பாண்ட்லி என்னும் ஐரோப்பியர் கண்டுபிடித்திருக்கிறார். எவ்வளவு வேகமாகப் பேசினாலும் அவ்வளவு வேகமாக அதுவும் அச்சடித்து விடுகிறது. இயந்திரத்தைக் கையால் தொட வேண்டிய அவசியமேயில்லை. இயந்திரம் மிகவும் சிறியது. இதுவும் ஒரு கலிகால விந்தை போலும்!

### ஏகாதிபத்தியத்தில் இந்தியர்.

ஏகாதிபத்தியத்தில்இந்தியரைப் பற்றி ஸ்ரீமான் தேஜ்ஸாப்ரூ நடத்திய வாதத்தைப்பற்றி ஸ்ரீமான் ஹார்னிமான் அவர்கள் பம்பாய் கிரானிகள் பத்திரிகைக்கு அனுப்பிய தந்தி:—

"ஸ்ரீமான் தேஜ் பகதூர் ஸாப்ரூவின் திறமையான ஆட்சேபணையின் பலனாகக் கெனியா விஷயத்தையும் உத்தேச விசாரணையிற் சேர்த்துக் கொள்வதற்குக் குடியேற்ற நாட்டு மந்திரி சம்மதப்பட்டு விட்டார். திடமான முடிவுக்கு வரும் பொருட்டுச் செவ்வாயன்று முழுதும் விவாதம் நடந்தது. இந்தியா மந்திரி பீல் பிரபு ஸ்ரீமான் ஸாப்ரூவை ஆதரித்தும் தளபதி ஸ்மட்ஸைக் கண்டித்தும் மஹாநாட்டில் பேசினார். தளபதி ஸ்மட்ஸ் நீங்கலாக மற்ற யாவரும் ௧௯௨௧-ம் ஆண்டின் தீர்மானத்தை யொப்புக்கொண்டு, தமது பிரேரணையையும் ஒப்புக்கொண்டு விட்டதால் தமக்குத் திருப்தி ஏற்பட்டு விட்டதென்று ஸாப்ரூ பேசினார். கெனியா முடிவு முடிவானதன்று என்பதை அவர் அறிவிருந்து அநுமானித்தார். ஆன்வார் மஹாராஜாவோ, தளபதி ஸ்மட்ஸை இந்தியாவின் சத்ரு வென்றும் இந்தியாவுக்கு ஒரு தடவை அவர் வந்துபோக வேண்டுமென்றும் சொன்னார். மேனாட்டு முறைகளைக் கீழ் நாடுகளில் கொண்டுவந்து புகுத்தக் கூடாதென்றும் மஹாராஜா சொன்னார். ஆச்சரியத்துடன் அவருடைய பிரஸங்கத்தைப் பலர் கேட்டனர். அந்தரங்கமாக அவரது பிரஸங்கத்தைப் பலர் கண்டித்தனர். ஸ்ரீமான் ஸாப்ரூவின் நிலைமையை மஹாராஜாவின் பிரஸங்கம் இன்னும் ஸங்கடமாக்கி விட்டது. தேவன்ஷயர் பிரபுபேசினார். பிறகு முதன் மந்திரி பேசினார். இந்தியா, ஏகாதிபத்தியத்தில் சம்பந்தம்பட்ட வரையில்தான் இந்த சம்மதமே யொழிய மற்ற அம்சங்களிலெல்லாம் ௩-மைல் எல்லையிருக்கும்"

### ஸ்ரீ வாலண்டைன் சிரால்.

இவர் இந்தியாவுக்குப் பெருத்த விரோதி. இந்தியரது வாழ்வைக் கண்டு பொறாதவர். இந்தியர்க்கு அடிமைச் சுமையைப் பலப்படுத்த வேண்டிய பிரயத்தனப்பட்டவர். இவரும், தளபதி ஸ்மட்ஸின் அபிப்பிராயங்கட்குச் சம்மதப் படாமல் கண்டிக்கிறார்:—

"நியாயம் சுதந்தரம் முதலியவற்றைப்பற்றி ஐரோப்பா சம்பந்தப்பட்ட வரையில் பிரமாதமாகப் பேசும் தளபதி ஸ்மட்ஸ் இந்தியரின் விஷயத்தில் நியாயம் செய்ய மறுப்பது துரதிர்ஷ்டமானதென்றும், இந்தியரை அநீதியாக நடத்துவதில் அவர் பிடிவாதம் காட்டுவதன் பலனாக ஏற்படக்கூடிய நிலைமைக்கு அவரே ஜவாப்தாரியாவாரென்றும், அவருடைய பிடிவாதத்தின் பலனாக இந்தியாவில் விசனிக்கத்தக்க சம்பவங்கள் ஏற்கனவே நடந்துவிட்டனவென்றும் சுட்டிக் காட்டுகிறார்."

### குடியேற்ற நாட்டுமந்திரி.

குடியேற்ற நாட்டு மந்திரியான ஸ்ரீமான் தேவன்ஷயர் பிரபுவின் குறிப்பில் இது காணப்படுகிறது:—



"யார் யாருக்கு ராஜீய உரிமைகள் கொடுப்பது என்ற விஷயத்தை அந்நாட்டாரின் இஷ்டத்துக்கு விட்டுவிட வேண்டும். இஷ்டமானவர்கட்கு அந்நாட்டார் பிரஜாபாத்தியம் கொடுக்கலாம். ஏகாதிபத்ய பிரஜாபாத்யம் வேறு; ஒரு குறிப்பிட்ட நாட்டின் பிரஜாபாத்யம் வேறு; அந்த நாட்டாருடைய ஸ்வாதீனத்துக்கும் ஏகாதி பத்யத்தின் ஒற்றுமைக்கும் பங்கமில்லாமல் சகித்து [illegible] வேண்டும்.

## உள்ளூர்ச் செய்தி.

| | |
|---|---|
| இரங்கூன் உண்டியல்வட்டம் | க-அ-0 |
| சென்னை உண்டியல்வட்டம் | -0-கூ-0 |
| ஐப்பசி மாத நடப்பு வட்டி | 0-க0-கூ |

### கிராமஸ்தல ஸ்தாபனம்.

தொழில்வரி சம்பந்தமாய்த் தங்கள் தங்களுக்கு ஏற்பட்ட வரியைக் குறைக்கவேண்டுமென்று கொண்டுவரப்பெற்ற மனுக்களை ஆலோசிக்கும் பொருட்டு சென்ற அ-கக-உரு வியாழக்கிழமையினன்று மாலை ச-மணிக்கு ஷை ஸ்தாபனக் கூட்டம் கூட்டப்பெற்றது. தீர்மானம் அடுத்த கூட்டத்திற்கு, ஒத்திவைக்கப் பெற்றிருக்கிறது.

### கந்தபுராணப் பிரசங்கம்.

அறுபத்துமூவர் மடத்தில் ஸ்கந்த ஷஷ்டியை முன்னிட்டு, நேற்று முதல் ஸ்ரீமத் சொக்கலிங்க ஐயா அவர்களால் கந்தபுராணப் பிரசங்கம் நடைபெறுகிறது.

### கோவிலூர்—குன்றக்குடி சாலைத் திறப்புவிழா.

காரைக்குடி நகரத்தாரின்பொருளுதவியைக் கொண்டு கோவிலூரிலிருந்து குன்றக்குடி வரை, போடப்பட்டிருக்கும் சாலையை நிகழும் ஐப்பசிமீ உஎடு திங்கட்கிழமை காலை கூ-கரு மணிக்கு நமது ஜில்லா வரிவசூல் தலைவர் (கலெக்டர்) ராவ் பகதூர், ஸ்ரீமான் வி.டி.கிருஷ்ணமாசாரியார் (பி.ஏ., பி. எல்.) அவர்களைக் கொண்டு, கோவிலூரிலிருந்து திறப்பிக்க நிச்சயித்திருக்கிறது என்று ஸ்ரீமான் ஆவி. பா. சிதம்பரம் செட்டியார் எழுதுகிறார்.

### சுகாதார அபிவிருத்திசங்கம்.

நிகழும் ருத்ரோத்காரி-வரு ஐப்பசி-மீ உஅ-வ செவ்வாய்க்கிழமை மாலை கூ-மணிக்கு இவ்வூர்ப் பசுபாகிருஷ்ணையர் தொழிற்சாலையில் சுகாதார சங்கத்தின் சார்பாக இவ்வூர் க்சார்ப்புக் கடைகளின் விஷயமாக ஒரு பொதுக் கூட்டம் நடை பெறுமென்று காரியதரிசி அறிவிக்கின்றார்.

### தீபாவளி நோன்பு.

"நோன்பென்பதுவே கொன்று தின்னாமை" என்பது முதியோருரை. எக்காலத்தும் கொன்று தின்னல் தேகாரோக்யத்துக்கும் மனது சுத்தத்திற்கும் ஆத்ம முன்னேற்றத்துக்கும் தடையாயுள்ளதென்பது யாவரும் உணர்ந்தது; அப்படியிருக்கக் கடவுளைத் தியானிக்கும் சமயமென்று வைத்தியருத்தேற்படுத்திக்கொண்டவிரத தினத்திலும் இத்தகையஅசுத்த ஆகாரங்களை விரும்புபவர் வயிற்றையும் நாவையும் என்னென்று நாம் புகல்வோம். "தொக்க விலங்கிற்கும் புள்ளிற்கும் காடே புலங்கெட்ட புல்லறிவாளர் வயிறு" என்ற நாலடியையே நாமும் காட்டுகின்றோம். தீபாவளியன்று நடந்த இப்பாதகச் செயலை நாம் வெறுக்கின்றோம். குடிகளிலும் சிறுகுடி பெருங்குடி சுதேசக்குடி பரதேசக்குடியாகிய குடி வகைகளும் நடந்தனவாம். என்னே விரதம்! என்னே அறிவுடைமை!! இவ்வாண்டுத் தீபாவளியில், பொது ஜனங்கள் பலர் "மகாத்மாவின் பிரியதனமாகிய கதரை" விரும்பிக் கட்டிக்கொண்டார்கள். சில தனவந்தர்களும் இதனை விரதமாகக் கைக்கொண்டமைக்கு மகிழ்கிறோம். ஆனால், கதராடையிற் கலப்பும் மோசமும் கலந்து உண்மையான தேச பக்தர்களைக் கலக்கிவிட்டது. கதர் வியாபாரிகள் என்று பெயரை மாட்டிக்கொண்ட போலி வியாபாரிகட்கு இது பொருந்தாச் செயலென்றே நாம் கூறுகிறோம். ஊக்கத்துடன் வரும் ஜனங்களைத் தூக்கிவிட வேண்டிய கடமையை மறந்து அவ்விரதத்தினின்றும் அவரை நீக்கிவிடல் கடமையாகாது.

### அமராவதிபுதூர்

ஐப்பசி-மீ உஉ-வ இவ்வூரில் தீபாவளி தினம் விமரிசையாகக் கொண்டாடப்பெற்றது. சில தேசாபிமானிகள் மாநிலத் தலைவராம் மகாத்மா சிறையில் வதியும் அமயம் தீபாவளி கொண்டாடுதல் முறையன்றென விடுத்தனர். கொண்டாடிய ஆண்மக்களில் பெரும்பான்மையோரும் கதருடையைத் தரித்தனர். இனுமளிப்பவரும் அப்புனித ஆடையையே அளித்தனர் என்ற விஷயத்தைக் கேட்கப் பலரும் சந்தோஷமடைவார்கள் என்பதில் ஐயமின்று. பல பஞ்சமர்கள் கட்குடியை விலக்கினர்.

மாலையில் இவ்வூர் நகரதேவதையாகிய திருவநாயகி அம்மன் கோவில் எதிரிலுள்ள பொட்டலில் ஆண் பெண் இருபாலாருமாக சுமார் இருநூறு ஜனங்களுக்கு மேல் குழுமியிருந்தனர். பஞ்சமர்களும் அக்கூட்டத்திற்கு வந்திருந்தனர். திரு. ஆ. சொக்கலிங்கம் செட்டியாரவர்கள் தலைமையில் கல்விடைக்குறிச்சி குருகுல வித்தியாசாலை ஆசிரியர் திரு ரா. அனந்த கிருஷ்ணய்யரவர்களும் பொதுஜன சேவையே தனது கடமையெனக் கொண்ட திரு. செ. முருகப்ப செட்டியாரவர்களும் திரு. பிச. சுப்பிரமணியன் செட்டியாரவர்களும் உபந்யசித்தார்கள். இரவு கூ-மணிக்கு சபை இனிது நிறைவெய்தியது என்று ஒரு நிருபர் எழுதுகிறார்.

## தந்திச்செய்தி.

### பினங்கு ஐப்பசிமீ உருஉ

| | |
|---|---|
| சென்னை உண்டியல் விலை | நூற்றுஅறுபத்தேழு. |
| ஈயம்விலை | நூற்றேழு. |
| ரப்பர் விலை | அறுபத்திரண்டு. |

### இரங்கூன்ஐப்பசிமீ உருஉ

| | |
|---|---|
| இயந்திர அரிசி பெரிது | சரு0—அ—0 |
| ஷை சிறிது | சஅரு—0—0 |
| மீடோன் அரிசி | சகூரு—0—0 |
| படகு நெல் | கஅரு—0—0 |
| புகையிரத நெல் | கஎஉ—0—0 |
| கோதுமை | சசா0—0—0 |
| கடலை | உருரு—0—0 |
| தட்டைப்பயறு | ரு00—0—0 |
| உழுந்து | ருசரு—0—0 |
| துவரை | சரு0—0—0 |
| அரிசிச் சோளம் | உரு0—0—0 |
| மொச்சை | ரு00—0—0 |
| காராமணி | உகூ0—0—0 |
| வெள்ளைமொச்சை புதிது | உருரு-0-0 |
| ஷை பழையது | ககூரு—0—0 |
| சிவப்பு மொச்சை | கஅரு—0—0 |
| பவுன் விலை | கசா—0—0 |
| வெள்ளி விலை | அச—0—0 |
| தங்கம் | ருரு—கக—0 |
| உண்டியல் | கசாகூ—0—0 |

பணம் நிதானம்.

### சென்னை ஐப்பசிமீ உகஉ

| | |
|---|---|
| பவுன் ஒன்றுக்குவிலை ரூ. | கரு—கரு—சா |
| வெள்ளி ரூபாயெடை ரூ. | 0-கரு-சா |

## கப்பற் செய்தி.

ஆண்டிக் என்னும் கப்பல் ஐப் உச-வயாகிய இன்று சென்னைக்கு வந்து மறுநாள் (சனிக்கிழமை), இரங்கூன் புறப்படும்.



## பிறநாட்டுச் செய்தி.

ரைன் பிரதேசம் ஒரு தனிக் குடியரசு நாடாகக் கொடிபோட்டு விட்டது.

* * *

இங்கிலாந்தில் ஒரு பிரபுவின் புத்திரி தனது வேலைக்காரனையே மணந்து கொண்டாள்.

* * *

ஆஸ்திரேலியாவில் குழி முயல்கள் அதிகமாகப் பெருகி வருகின்றனவென்று தெரிகிறது.

* * *

நியூயார்க் நகரத்தில், ஊர்க்காவற் கூட்டத்தார்க்கு இருப்புத் தகட்டினால் சட்டை செய்து கொடுத்திருக்கிறார்கள்.

* * *

மேரி மகாராணியின் சகோதரரான அத்லோன் பிரபு தென் ஆப்பிரிக்கா ராஜப் பிரதிநிதியாக நியமிக்கப் பட்டிருக்கிறார்.

* * *

ஜர்மனியில் "க0 லட்சம் மார்க்" என்ற பெயருடன் புதிய ஜர்மன் நோட்டுகள் நவம்பர் முதல் தேதியிலிருந்து வெளிப்படுகின்றன.

* *

லண்டனில் ராஜாங்க வைத்திய ஏற்பாட்டில் ஒரு நெருக்கடியுண்டாகி அதன் பயனாக, கூ00 வைத்யர்கள் ராஜீநாமாச் செய்து விட்டார்கள்.

* * *

பர்ஷியாவிலும் ஆப்கானிஸ்தானத்திலும் ருஷியப் போல்ஷ்விகர்கள் மகத்தான முயற்சிகளைச் செய்துக் கொண்டு வருவதாகத் தெரிகின்றது.

* * *

ருஷ்யப் போல்ஷ்விக்கர்களால் இன்னும் இருபது ஆண்டுகட்குள் இந்தியாவுக்கும் ஆபத்து நேரிடுமென்று தளபதி டௌன்ஷண்ட் கூறுகிறார்.

* * *

ஒரு பெண்ணை விட வேகமாக ஓடக் கூடாதவன் அப்பெண்ணை மணக்கக் கூடாதென்னும் வழக்கம் எல்க் என்னும் அமெரிக்கர்களிடம் இருக்கிறது.

* * *

சூரியன் தேய்ந்து கொண்டிருக்கிறது. இன்னும் லட்சக் கணக்கானவருஷங்களில்மறைந்துபோய் விடுமென்று அலர்ட் என்ற நிபுணர் கூறுகிறார்.

* * *

பிரான்சு நாட்டு மாதர் கூட்டத்தின் தலைவியான மாடலீன் பெல்லடியர் என்னும் மாது பெண்களை ராணுவத்திற் சேரச்சொல்லி வற்புறுத்துகின்றார்.

* * *

நிலம் நீர் வான் என்னும்மூன்றிடங்களிலும் சென்றுவரக் கூடியதான விமான மொன்றை லண்டனிலுள்ள ஒரு வியாபாரக் கூட்டத்தார் கண்டு பிடித்திருக்கின்றனர்.

* * *

இயந்திர வண்டியிலிருந்து உண்டான விஷக் காற்றினால் பிரிஸ்டல் நகரத் தலைவராகவும் பாராளுமன்றத்து அங்கத்தினராகவுமிருந்த ஒருவரது குமாரர் இறந்து பட்டார்.

* *

இங்கிலாந்தில் தவளை யுணவு அதிகரித்திருப்பதால், பிரான்ஸிலிருந்து தினமொன்றுக்கு உ000-ரு000 தவளைகள் ஆகாய விமானங்கள்மூலம் போய்க் கொண்டிருக்கின்றன.

* * *

ஸ்ரீமான் லாயிட் ஜார்ஜுடன் சுற்றுப் பிரயாணத்தில் அவரறியாமல் தொடர்ந்து பிரயாணம் செய்துக் கொண்டிருந்த ஒரு இந்தியரைக் கனடா அதிகாரிகள் பிடித்துக் கொண்டனர்.

* * *

விவாஹமென்பது கேவலம் சௌகர்பத்தின் பொருட்டுத்தான் செய்யப் படுகின்றதென்றும் அந்த முறை வெறுக்கத் தகுந்ததென்றும் இங்கிலாந்தில் அறிவாளிகள் சொல்லுகின்றார்கள்.

* * *

ஐரோப்பிய நாடுகளெங்கும் போலி நாணயங்கள் ஏராளமாக வழங்கப் படுகின்றன. அமெரிக்காவிலும் அப்படியே. அதனால் அங்கெல்லாம் பொருளாதார நிலைக்கு ஆபத்து நேரிட்டிருக்கிறது.

* *

இங்கிலாந்தில் பிழைப்பில்லாதவரின் கஷ்டத்தை நிவர்த்தி செய்வதற்காக இங்கிலாந்தின் விளைபொருள்களை வெளிநாடு போக விடாமல் தடுத்தல் வேண்டுமென்று ஆங்கிலப் பிரதம மந்திரி பேசினார்.

## வைசிய நாட்டுச்செய்தி

### சாஸ்வதீ சங்கம் புதுவயல்.

இவ்வூர் சாஸ்வதி சங்கத்தின் சார்பாக முதலாவதாண்டு வருஷாவது இந்தக் கூட்டம் காளிதாமீ கக-உ ஒப், மு. வி. வீர. ச. விருத்தகிரிச் செட்டியார் அவர்கள் அக்கிராசனத்தில் பல பேர்வர்கள் உபந்நியாசித்தார்கள் என்று தலைவர் பழ. ராமநாதன் எழுதுகிறார்.

* * *

### மேலைச்சிவபுரி சன்மார்க்கசபை.

நாளிதுரு ஐப்பசி-மீ கஎ-உ வெள்ளிக்கிழமை பிற்பகல் ரு-மணிக்கு

ஐரோப்பாவிலுள்ளஎம்ல் என்ற மலையின் மீது செங்குத்தாக ஒரு இருப்புப் பாதை செல்கிறது. அதில் ஏறும் வண்டித் தொடர் ஏணியைப்போ லொன்றின்மேலொன்றாக ச-மாடிகளையுடையது. மாடியொவ்வொன்றிலும் ச-பேர் உட்காரலாம்.

* * *

ஆப்கானிஸ்தானத்தின் தலைநகராகிய காபூலில் துருக்கியர் ஆப்கானியர் ஹிந்துக்கள் இந்திய முஸ்லீம்கள் எல்லோரும் ஒன்று கூடிக் கிலாபத் இயக்கத்தைப் பலமாக ஆதரித்த மகாத்மா காந்தியின் விடுதலைக்காக சாந்தமான போராட்டம் நடத்த வேண்டுமென்று தீர்மானித்தார்கள்.

* * *

மரங்களின் மேற் பட்டையை உண்மரத்திற் படாமல் வளையமாக ஜாக்கிரதையாயெடுத்துவிட்டு, அவ்வெட்டிடங்களில் சேலையைத் திணித்துக் கட்டி விட்டால் வேரின் மூலம் மரத்தின் மேலேறும் சத்துக்கள் வீண் போகாமல் நேராகப் பழத்திற்கே செல்லுமென்றதென்னும் யுக்தியைக் கண்டுபிடித்து இங்கிலாந்திற் கையாண்டு வருகிறார்கள்.

* * *

"ரீகல்" என்னும் பெயருடன் பாரிஸில் ஒரு பத்திரிகை வெளியாகிறது. அது உண்பதற்குத் தகுந்த தொருவகை மாவினால் செய்யப் பெற்ற காகிதத்தில், புசிப்பதற் கேற்றதொரு வகைத் திரவத்தாலேற்பட்ட மையினால் அச்சடிக்கப் பட்டிருக்கின்றது. ஆதலால், அதனை வாங்கும் ஜனங்கள் படித்து விஷயங்களை யறிந்தவுடன் தின்று விடுகிறார்கள். இப்பத்திரிகை மீன் பிடிப்போர் முதலிய ஏழை ஜனங்களின் போஷணைக்கு நடைபெறுகிறது.

இதன் மாதக்கூட்டம் ஒன்று கூட்டப் பெற்றது. அவ்வமயம் மகிபாலன் பட்டி வித்வான் மு. கதிரேசச் செட்டியாரவர்கள் தலைமை வகித்துப் பெருமைப் படுத்தினார்கள். உலகம்பட்டி ஸ்ரீ பழ. சிவராமன் செட்டியாரவர்கள் இளையான்குடிமாற நாயனார் சரித்திரத்தையும், ஷெயூர் ஸ்ரீலஸ்ரீ ஈசான சிவம் இலக்குமண ஐயா அவர்கள் "சிவாதிக்யம்" என்னும் விஷயத்தையும் மிகத் தெளிவாக எடுத்துப் பேசினார்கள். பின்னர், தலைவரவர்கள் கேட்போர் மனம் கசிந்துருகும் வண்ணம் முடிவுரை கூறினார்கள். காரியதரிசியவர்கள் வந்தனத்தோடும், ஸ்ரீ சிங்காரஞ் செட்டியாரவர்கள் கடவுள் வாழ்த்தோடும் கூட்டம் இனிது நிறைவெய்தியது என ஆசிரியர் ஏ. பூவராகம் பிள்ளை எழுதுகிறார்.

* * *

பாகனேரி.

தேசபக்தர்களின் வருகை:—மதுரை ஸ்ரீமான்களான சீதாராமய்யர், சக்கரை ராவுத்தர் முதலிய தேசபக்தர்கள் நாளிது ஐப்பசிமீ கஅவ காலை அ-மணிக்கு இவ்வூருக்கு விஜயம் செய்து, அன்று மாலை மகாத்மா காந்தியடிகளின் திருவுருவப்படத்துடனும் மேளவாத்யம் தேசீய பஜனையுடனும் திண்ணைக்குறடு மைதானத்திற்குச் சென்று, அங்கு பெத்தப்பனம்பலக்காரரின் தலைமையில் ஸ்ரீமான் ஐயரவர்கள் தேசீய சபையின் நிர்மாணத் திட்டத்தைப் பற்றியும் ஸ்ரீமான் சர்க்கரை ராவுத்தர் கட்குடியைப் பற்றியும் உபந்யசித்தபின் வந்தேமாதர கோஷத்தினிடையே ஊர்வலம் நடைபெற்றது. ககூவமாலை தேசபக்தர்களிருவரும் கல்லலுக்குச் சென்றுவிட்டனர் என்று ஒரு நிருபர் எழுதுகிறார்

* * *

**மோழி ஷண்முக ஸன்மார்க்க சபை.**

இச்சபையின் எ-வது மாதக் கூட்டம் இம்மதி கஉ-வ ஆதிவாரம் மாலை க-மணிக்கு ஸ்ரீ தெண்டாயுதபாணி கோவிலில் லேப்பட்டான் திருவாளர் அ. வீர. அ. சு. அதிபர் சாமிநாதன் செட்டியாரவர்கள் தலைமையில் திருவாளர்களான முரு. குமாரகுருபரஞ் செட்டியார்வர்கள், இரங்கூன் ப. வெ. வெங்கிட கிருஷ்ண நாயுடு அவர்கள், சி. வி. நடேசம் பிள்ளையவர்கள் முறையே தருமம், பொருள், பெண்கல்வி என்னும் விஷயங்களை உபந்யசித்தார்கள். பின்னர், இரங்கூன் அப. சொ. அதிபர் சோமசுந்தரஞ் செட்டியாரவர்களால் கொண்டுவரப்பட்ட கதராடை கட்ட வேண்டுமென்ற தீர்மானம் முரு. குமாரகுருபரஞ் செட்டியாரவர்களால் ஆமோதிக்கப் பெற்றது. தலைவரவர்கள் தக்க முடிவுரை கூற ஆர் சந்தண தாம்பூலம் வழங்கப் பெற்று சபை ஏழரை மணிக்கு இனிது நிறைவெய்தியது என உபகாரியதரிசி எழுதுகிறார்.

## ஹாஸ்யச் செய்தி.

ஐரோபியர்:—என் மகனும் உன் மகனுஞ் சேர்ந்து நம் மகனை யடித்து விட்டார்களாமே! ஏன் இத்தனை துஷ்டர்களாயிருக்கின்றார்களிவர்கள்?

மனைவி:—அவர்கள் துஷ்டர்கள் தாம். உங்கள் முன்னைய மனைவி துஷ்டை யென்பது உங்கட்குத் தெரியும். எனது முன்னைய புருஷன் துஷ்டனென்பது உலகப் பிரஸித்தம்.

* * *

உபாத்தியாயர்:—பாலைவனம் எப்படி யிருக்கும்; ஒரு உதாரணம் சொல்.

மாணவன்:—தங்கள் தலையைப் போலிருக்கும்.

* * *

சட்டசபை.

ஒரு அங்கத்தினர்:—என்னுடைய உபந்யாஸத்தைப் பற்றி மற்றவர் என்ன சொல்லிக்கொள்ளுகிறார்கள்.

மற்றொருவர்:—அதைப் பின்பற்றுவது கடினமாகத்தான் இருக்கிறதுஎன்கிறார்கள்.

அங்கத்தினர்:—(சந்தோஷித்து) நீங்கள் அப்படிச் சொல்வீர்களென்று எண்ணினேன். நான் உபந்யஸிக்கும்போது சுருக்கெழுத்துக்காரர்கூட மருண்டு மருண்டு விழித்துக்கொண்டிருந்தனர்.

மற்றொருவர்:—இருக்கத்தான் வேண்டும். யாரும் அப்படி விழித்திருப்பர். உங்கள் உபந்யாஸத்தில் வாக்கியங்களும் அபிப்பிராயங்களும் ஒன்றற்கொன்று சிறிதுகூடச் சம்பந்தமில்லாம லிருந்தன.

* * *

முதலியார்:—என்ன! செட்டியாரவர்கள்! சட்டஸபைக்கு வருகின்றீர்கள்? ஒரு நாளாவது நீங்கள் பேச நான் கேட்டதில்லையே.

செட்டியார்:—எனக்கே ஆச்சரியமாக இருக்கிறது. சட்டஸபைக்குப் போகும் காலங்களிலெல்லாம் எனக்குத் தொண்டையுபத்திரவம் வந்துவிடுகின்றது. அப்படித் தவறிய நாட்களில், அன்றைய விஷயங்கள் எனக்கு இருண்டு கிடக்கின்றன.

* * *

அரசன்:—என்ன! ரணசூரா!! இன்றைக்குப் போரில் வெகு பரபரப்பாக இருந்தாயே; என்ன சமாச்சாரம்.

ரணசூரன்:—என்னவா? சுமார் ஆயிரம் பேர்களுடைய கால்கள் என்னால் இன்று வெட்டப்பட்டிருக்குமே!

அரசன்:—அப்படியா! தவறி ஒரு தலையில்கூட உன் கத்தி படவில்லையா?

ரணசூரன்:—என்ன செய்வேன் பிரபு? ஒரு உடலுக்காவது தலையேயில்லாமையைப்பற்றி நானே வருந்துகிறேன்.

* * *

தனவான்:—(யாசகரைப் பார்த்து) என்ன பண்டிதரே! என்னைப்போலவே காணப்படுகின்றீரே! ருo-ஆண்டுகட்கு முன்னர் உங்கள் தாயார் இந்தப் பக்கம் வந்து போனதுண்டோ?

பண்டிதர்:—சுமார் ருo-ஆண்டுகட்கு முன்னர், என் தகப்பனார் இவ்வூருக்கு வந்து சில காலம் தங்கி யிருந்தாரென்று கேட்டிருக்கிறேன்.

* * *

எஜமானன்:—எஜமானுக்கும் வேலைக்காரனுக்கும் வித்யாஸமென்ன?

வேலையாள்:—எத்தனை பழகியிருந்தாலும் எத்தனை படித்திருந்தாலும் வயதில் எவ்வளவு முதிர்ந்திருந்தாலும் வேலைக்காரனிடம் தினந்தோறும் காரணமில்லாதபோதுங் கடுமுகம் காட்டவேண்டியது எஜமானனியல்பு. விதியை நொந்து வணங்கிப்போக வேண்டியது வேலைக்காரனியல்பு.

* * *

மாதவய்யர்:—சுப்பையரே! உமது தமக்கை புருஷன் உம்மைக் காட்டிலும் சிறியவரா யிருந்தால், அவருக்கு நீர் மரியாதை யெப்படிச் செய்வீர்?

சுப்பய்யர்: துவாதசியன்று சூரிய கிரகணம் வந்து நேர்ந்துவிட்டால், துவாதசி விரதம் பிரதானமா? கிரஹண விரதம் பிரதானமா? இதைச் சொல்லும்.

## தபால் தந்திமித்திரன்.

இரண்டாம்பதிப்பு
வெளியாகிவிட்டது.

இதில் பர்மா தேசத்தைப் பற்றின வர்த்தக விஷயமாய்த் தெரிந்துகொள்ள வேண்டிய அநேக விஷயங்களும் படி, நிறை, அளவுகளும், விலைபொருள்களின் காலவரையறையும், பினங்கு, சிங்கப்பூர், சிலோன், பர்மா, இந்தியா முதலிய இடங்களிலுள்ள தபால் தந்தி ஆபீஸ்களின் பெயர்களும், நடப்பு வட்டி தவணை வட்டிகளின் விபரங்களும், வேறு சில முக்ய விஷயங்களும், அதிகமாகச் சேர்க்கப்பட்டுள்ளன. வர்த்தகர்களுக்கு இப் புத்தகம் அவசியம் வேண்டற்பாலது. சொற்பப் பிரதிகளே தயாராக இருக்கிறபடியால் வேண்டுவோர் உடனே ஆர்டர் அனுப்பிப் பெற்றுக்கொள்ளுமாறு கேட்டுக் கொள்ளுகிறோம்.

இதன் விலை ரூ. ௨—௦—௦
வீ. பி. சார்ஜ் பிரத்தியேகம்.

வைசியநேசன் கம்பெனி
தபால் பெட்டி கெர், ௨௫௪
௩௭ மெர்ச்சண்ட் வீதி, ரெங்கூன்

## ஸ்ரீ கௌரி பானம்ருதம்.

காப்பிக்குப்பதிலாக உபயோகிப்பது. நம் தேசத்து மூலிகைகளின் கிழங்குகள், வித்துக்கள், புஷ்பங்களால் தயாரிக்கப்பெற்றது. காப்பியைப்போலவே ருசியும் மணமும் உள்ளது. ஒருமுறை உபயோகித்தவர்கள் மேலும், மேலும் உபயோகிக்க விரும்புவார்கள்.

### இதன் அரிய குணங்கள்.

ரக்த சுத்தி, பித்த சாந்தி, உஷ்ண சாந்தி உண்டாக்கி மலச்சிக்கலை நீக்கி, பசிதீபனத்தைக் கொடுக்கும். ஞாபக சக்தி ஆரோக்கியம் இவைகளை விருத்தி செய்யும். கணைச்சூடு, மூலச்சூடு, பித்த எரிச்சல், வாந்தி, மயக்கம், மேக வெட்டை, நீரிழிவு இவைகள் நீங்கும். டின் ஒன்றுக்கு விலை அணா ௮. டஜன் ஒன்றுக்கு விலை ரூபா ௫—௧௨—௦ வி. பி. சார்ஜ் பிரத்தியேகம்.

விலாசம்:—டாக்டர் வி. ஆர். சுந்தரம்,
ஆயுர்வேத வைத்திய மந்திரம்
பைகிராப்ட்ஸ் ரோட் ராயப்பேட்டை,
சென்னை.

## வெள்ளைக்கல்சாமான்.

படி, பட்டியல், அ பட்டை நாகபந்தக்கால், சபட்டை பொட்டிப்புக்கால், க்சு பட்டைக் கால்கள், ரவுண்டுகோல், சோடிக் கால்கள் மற்றப்படி எந்தினுசில் வேண்டுமென்றாலும் அடியில்கண்ட விலாசத்துக்கு எழுதினால் கூடிய சீக்கிரத்தில் அனுப்பத் தயாராயிருக்கிறோம்.

அழ. பெரி. பெரியண்ணன்
செட்டியார்.
ராயவரம் புதுக்கோட்டை
சமஸ்தானம்.

தந்திவிலாசம்.
Tel. "Davances" (தாவணீஸ்) Bangalore City.

## பெங்களூர் கண்டாங்கி.

பிரசித்தி பெற்ற மேற்கண்ட கண்டாங்கிகளும், சிற்றாடைகளும், பாவாடைகளும், எங்கள் சொந்தத்தறிகளில், திரித்த பட்டிலும், கெட்டிச்சாயத்திலும், தயாரானவை. மற்ற இடங்களில் தயார் செய்து பெங்களூர் கண்டாங்கிகளென்று சொல்லி அநேக வியாபாரிகள் உங்களை மோசம் செய்கிறார்கள். அவரவர்களின் விருப்பத்தின்படி அனுப்பும் ஆர்டர்களுக்கு தாமதமின்றி தயார் செய்து அனுப்புகிறோம்.

எல்லா ஆர்டர்களும், வி. பி. யில் அனுப்பப்படும்.

குறிப்பு:—இந்த கம்பெனியில் டிராவலிங் ஏஜண்டு வேலை பார்த்து வந்த கடியாபட்டி ஏ. வி. ஸ்ரீனிவாஸய்யங்கார் என்பவர் விஷயத்தில் எங்களுக்கு அவநம்பிக்கை ஏற்பட்டதினாலும், செட்டிமார் நாட்டில் சில பெரியமனுஷாள் மேற்படி அய்யங்காரைக் கம்பெனியை விட்டு நீக்கி விடும்படி சொன்னதினாலும் மேற்படி ஸ்ரீனிவாஸய்யங்காரை ௩௧—௧௨—௨௨ தேதியிலிருந்து எங்கள் கம்பெனியைவிட்டு விலக்கியிருக்கிறதினால் மேற்படியாரிடம் எங்கள் கம்பெனி விஷயமாக ஒருவித ஆர்டரும் கொடுக்கக்கூடாது. ஷை ஐயங்கார் எங்கள் கண்டாங்கி விஷயமாய் ஏதாகிலும் தூஷணைகள் செய்தாலும் அவைகளையும் நம்பக்கூடாதென கேட்டுக்கொள்கிறோம். ஷை ஐயங்கார் ௩௧-௧௨-௨௨-க்கு பிறகு எங்கள் கண்டாங்கி விஷயமாய் வாங்கியிருக்கும் ஆர்டருக்கு நாங்கள் உத்திரவாதியாகமாட்டோம்.

வி. கே. ஹநுமந்தப்பா அண்டு பிரதர்ஸ்,
ஜவுளி வியாபாரிகள், மாருதிஹால்,
சிக்பேட்டை, பெங்களூர் சிட்டி.

## தனவைசிய ஊழியன்

### சந்தா விபரம்.

| | |
|---|---|
| உள் நாட்டிற்கு வருஷ சந்தா | ரூ. ௫. |
| வெளிநாடுகட்கு | ரூ. ௬. |
| தனிப்பிரதி | அணா. ௨. |

### விளம்பர விபரம்.

| | |
|---|---|
| மாதம் ஒன்றுக்குப் பத்தி ௧-க்கு | ரூ. ௨௦. |
| ஷை பத்தி அரைக்கு | ரூ. ௧௧. |
| ஷை கால் பத்திக்கு | ரூ. ௬. |
| ஷை அங்குலம் ஒன்றுக்கு | ரூ. ௨. |

மூன்று மாதங்கள் விளம்பரஞ் செய்வோர்க்கு மாதம் ஒன்றுக்கு பத்தி ஒன்றுக்கு ரூ. ௧௭-ஆகவும் அரைப்பத்திக்கு ரூ. ௯-ஆகவும், கால் பத்திக்கு ரூ. ௫-ஆகவும் போடப்படும்.

ஆறு மாதங்களும் அதற்கதிகமாகவும் விளம்பரஞ் செய்வோர்க்கு மாதம் ஒன்றுக்கு பத்தி ௧-க்கு ரூ. ௧௫-வீதமும் அரைப் பத்திக்கு ரூ. ௮-வீதமும், கால் பத்திக்கு ரூ. ௪-வீதமும் போடப்படும்.

ஒருபக்கம் விளம்பரஞ் செய்ய ௧-மாதத்திற்கு ரூ. ௫௦.
ஷை ஒரு வாரத்திற்கு ரூ. ௧௫.

குறிப்பு:—இது கண்டிப்பான ஏற்பாடாகும். இதினின்றும் யாரும் எழுதித் தெரிந்து கொள்ள வேண்டுமென்பதில்லை. விளம்பரஞ் செய்வோர் பூராத்தொகையும் முன் பணமாக அனுப்பி விடுதல் வேண்டும். நீண்ட கால விளம்பரஞ் செய்வோர் மூன்று மாதப் பணத்திற்குக் குறையாமல் முன்பணமனுப்பிவைக்க வேண்டும். முன்பணமில்லாத போது விளம்பரம் நிறுத்தி விடப்படும்.

காரியஸ்தர்,
"தனவைசிய ஊழியன்" ஆலயம்,
காரைக்குடி.

ராம். சொக்கலிங்கத்தால் காரைக்குடி தனவைசிய ஊழியன் அச்சியந்திரசாலையில் அச்சியற்றிப்பிரசுரம்செய்யப்பெற்றது.

